

# இஸ்லாமிய நீதிக்கதைகள் பாகம் 1

குழந்தைகளுக்கு இஸ்லாத்தினை வழங்கிடுவோம் “அழகாக”



APRIL 6, 2016

ISLAM IN TAMIL

Chennai, Tamil Nadu

http://aarabdul.com

# உள்ளடக்கம்



## பாலில் நீர் கலக்க மறுத்த மகள்!

இஸ்லாத்தின் இரண்டாவது கலீஃபா ஹஸரத் உமர் (ரலி) அவர்களின் ஆட்சிக்காலம் இஸ்லாமிய வரலாற்றில் பொற்காலம் என

வர்ணிக்கப்படுகிறது. நீதியின் உறைவிடமான உமர் (ரலி) அவர்கள் இரவு நேரத்தில் மாறு வேடம் பூண்டு நகர்வலம் வருவது வழக்கம். மக்கள் குறைகளை அறிந்து உடன் நிவாரணமளிப்பார்கள்.

ஒரு முறை கலீஃபா அவர்கள் நகர்வலம் வரும் போது ஒரு வீட்டில் தாயும் மகளும் அளவளாவிக் கொண்டிருப்பது அவர்களின் செவிக்கு எட்டியது. பால் வியாபாரம் செய்து ஜீவனம் நடத்தாட்டும் அந்த ஏழைத்தாய் தன் மகளிடம் இன்றைக்கு வாடிக்கையாளருக்கு பகிர்ந்து கொடுப்பதற்கு பால் பற்றாக்குறை காரணமாக தண்ணீரை பாலில் கலக்குமாறு தனது மகளைப் பணிக்கிறார். மகளோ இது பாவச் செயல் என்று கூறி மறுக்கிறார்.



அப்போது அந்தத்தாய், “நீ ஏன் பயப்படுகிறாய்? கலிஃபா தான் இங்கு இல்லையே” எனக் கூற மகள் “ உண்மைதான், கலிஃபா இங்கு இல்லாவிடுனும் அல்லாஹ் நம்மைப் பார்த்துக் கொண்டிருக்கிறானல்லவா? அவனுக்கு மறுமையில் பதில் சொல்ல வேண்டுமே” என தாயாரை எச்சரிக்கிறாள். இதைச் செவியுற்ற கலிஃபா அவர்கல் நேர்மையின் சின்னமான அப்பெண்ணை தன் அன்பு மகன் ஆஸிமுக்கு மணமுடித்துக் கொடுக்கிறார்கள். இவர்கள் வழித்தோன்றலே இரண்டாம் உமர் என் இஸ்லாமிய உலகம் போற்றும் “உமர் இப்னு அப்துல் அஸீஸ்(ரஹ்) அவர்களாவார்





## பிரசவ வேதனையில் மன்னர் அவசர உதவி

மன்னர் கலீஃபா ஹஸரத் உமரே பாரூக் (ரலி) அவர்கள் இரவு நகர் வலம் வந்து கொண்டிருந்தார்கள். ஒரு ஒழுங்கையினூடாக அவர்கல் செல்கையில் ஒரு குடிசையில் பெண்ணொருத்தியின் முனகல் சத்தம் கேட்கிறது. அப்பெண்ணின் கணவனோ வீட்டிற்கு வெளியே கையைப் பிசைந்தவாறு நின்று கொண்டிருக்கிறார்.

கலீஃபா அவர்கள் காரணத்தை வினவவே தனது மனைவி பிரசவ வேதனையால் அவதியுறுவதாகவும் உதவிக்கு பெண் துணை ஒருவருமில்லையெனவும் கூறுகிறார்

அவருக்கு ஆறுதல் கூறிவிட்டு உடன் தன் வீடு திரும்பிய கலீஃபா அவர்கள் தன் மனைவியுடன் ஏழையின் வீட்டிற்கு வருகிறார். கலீஃபாவின் மனைவி பிரசவ

வேலையைக் கவனிக்கிறார். கலிஃபா அவர்களோ தானே அடுப்பு எரித்து தேவையான வெந்நீரை ஏற்பாடு செய்கிறார்.



அவ்வேளை குழந்தையின் அழும்குரல் கேட்கிறது. கலீஃபாவின் மனைவியார் வெளியே வந்து கலீஃபா அவர்களிடம் விசுவாசிகளின் தலைவரே! உங்கள் நண்பருக்கு ஆண் குழந்தையொன்று பிறந்துள்ளது என்ற நற்செய்தியை சொல்லுங்கள் என்கிறார்.

தன் மனைவிக்கு பிரசவம் பார்த்தது நாடாளும் கலீஃபா அவர்களின் துணைவியார் என்பதை அறிந்து கொண்ட அந்த ஏழையின் கண்களில் கண்ணீர் பெருகுகிறது. கலீஃபா அவர்களின் கையைப் பற்றிப் பிடித்து நன்றி கூறுகிறார்.

மக்களைத் தேடிச் சென்று அவர்களின் குறைகளை நிவர்த்தி செய்பவரே நல்லாட்சிக்கு உகந்தவர் என அவ்வேழையின் வாய் முணு முணுக்கிறது.



# பெருமானாரின் பெருநாள் பரிசு

அன்று நோன்புப் பெருநாள். மதீனா நகரவீதிகளிலே மக்களின் ஆரவாரம். சிறு பிள்ளைகள் புத்தாடை பூண்டவர்களாக வீதிகளிலே விளையாடிக்



POOR MUSLIM GIRL

கொண்டிருக்கின்றனர். அந்த சிறுவர்களின் முகத்திலே மகிழ்ச்சி பொங்குகிறது. புனித நோன்பை நோற்று முடித்து அதற்குப் பரிசாகக் கிடைத்த புனித ஈகைத் திருநாளல்லவா இன்று.

இவற்றையெல்லாம் உற்று நோக்கியவனாக ஏக்கப் பெருமூச்சுடன் மேனியெல்லாம் புழுதிபடிந்த நிலையில் தெருவோரத்தில் கண்கள் குளமாக காட்சியளிக்கின்றான் கந்தலுடையுடன் ஓர் ஏழைச்சிறுவன். அவனை யாரும் கவனித்ததாகத் தெரியவில்லை.

அவ்வழியே அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கல் வருகிறார்கள். அநாதவராக நிற்கும் அந்தச் சிறுவனை காண்கிறார்கள். அச்சிறுவனின் தலையை அன்புடன் தடவியவாறே ஏன் அழுகிராய் மகனே! என வினவுகிறார்கள், சிறுவனோ, அழுதவனாக எனக்கு அம்மாவும் இல்லை அப்பாவும் இல்லை. இந்த பெருநாள் தினத்தில் அவர்கள் உயிரோடிருந்தால் என்னை இவ்வாறு அநாதவராக விட்டிருப்பார்களா? என ஏக்கத்தோடு கூறுகிறான்.

கருணை நபிகளாரின் கண்கள் கலங்குகின்றன. மகனே! அழாதே நீ இன்று முதல் அநாதையல்ல. நான் உனக்கு அப்பா எனது மனைவி ஆயிஷா உனக்கு அம்மா! எனக்கூறு அந்தச்சிறுவனை தன் வீடு அழைத்துச் சென்று அவனுக்கு புத்தாடை அணிவித்து இனிப்பு பண்டங்கள் கொடுத்து மகிழ்விக்கிறார்கள். அந்தச்



GIVING GIFTS TO CHILDREN'S

சிறுவனும் கவலை மறந்து மற்றச் சிறுவர்களோடு சேர்ந்து விளையாடி மகிழ்கிறான். பெருநாள் பரிசாக கிடைத்த அந்த அனாதைச் சிறுவனை அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள். அன்போடு ஏற்றுக்கொள்கிறார்கள்.



## கொள்ளையர் தலைவனை வெட்கப்பட வைத்த சிறுவன்

ஞானமகான் அப்துல் காதிர் ஜீலான்(ரஹ்) அவர்கள் சிறுவதினராய் இருந்த போது அன்னாரை மார்க்கக் கல்வி கற்பதற்காக தாயார் வெளியூருக்கு அனுப்பினார். செலவுக்காக நாற்பது பொற்காசுகளையும் கொடுத்தனிப்பபினார்.

தனது மகன் காட்டு வழியில் பயணம் செய்ய வேண்டியிருப்பதனால் வழிப்பறிக் கொள்ளையர்களின் அட்டகாசம் அவ்வேளை மிகுதியாக இருந்ததாலும் தாயார் பொற்காசுகளை மகனின் உடையில் கைகளின் கீழே அக்குள் பகுதியில் வைத்து பணம் இருப்பதே யாருக்கும் தெரியாத மாதிரி தைத்து அனுப்பினார். அத்தோடு உயிரே போகும் நிலை ஏற்பட்டாலும் பொய் பேசாதே. என உபதேசம் செய்து அனுப்பினார்.

ஒரு சில பயணிகளோடு அப்துல் காதிர் ஜீலான்(ரஹ்) அவர்களும் பயணப்பட்டார்கள். சில நாட்களின் பயனத்திற்கு பிறகு காட்டின் வழியே பயணம் மேற்கொள்ள வேண்டியிருந்தது. அவர்கள் பயந்தது போல்

கொள்ளையர்கள் அடங்கிய கூட்டம் அவர்களை முற்றுகையிட்டது. ஒவ்வோருவரையாக நெருங்கி அவர்களின் பொருளை மிரட்டி வாங்கிக்கொண்டனர். அப்துல் காதிர் ஜீலான்(ரஹ்) அவர்களை பார்த்த கொள்ளையர் தலைவன். சிறுவன் இவனிடன் என்ன இருக்க போகிறது என என்னி விட்டுவிட்டான். கடைசியாக அனைத்தைது பொருள்களையும் மிரட்டி பறித்த கொள்ளையர்கள்.



MUSLIM CHILDREN'S #EYEEM

*"கடைசியாக கேட்கிறேன், யாரிடமாவது ஏதேனும் பணம் பொருள் உள்ளதா? உண்மையை கூறுவிடுங்கள் இல்லையேல் நடப்பதே வேறு"*

என மிரட்டினான். இதை கேட்ட அப்துல் காதிர் ஜீலான்(ரஹ்) அவர்கள் எந்தவித பதற்றமும் இல்லாதவராக, தானாக முன்வந்து என்னிடம் நாற்பது பொற்காசுகள் உள்ளன என கூறினார்கள்,

அதற்கு கொள்ளையன், “என்ன!! உன்னிடன் நாற்பது பொற்காசுகளா?” என வியப்பாக கேட்டான்.

உடனே தனது அக்குள் பகுதியில் தைக்கப்பட்ட பகுதியை கிழித்து நாற்பது பொற்காசுகளை கொள்ளையனிடன் காட்டினார்கள். இதனை பார்த்து ஆச்சரியம் அடைந்த அந்த கொள்ளையர் தலைவன். “ நீ நினைத்திருந்தால் இதனை இல்லை என பொய் கூறி தப்பித்திருக்காலாமே. நீ ஏன் அவ்வாறு செய்யவில்லை என. ஆச்சரியத்தோடு வினவினான். அதற்கு அப்துல் காதிர் ஜீலான்(ரஹ்) அவர்கள், “இல்லை, உயிரே போகும் நிலை ஏற்பட்டாலும் பொய் கூறக்கூடாதென என் தாயார் உபதேசம் கூறியுள்ளார்” அதனால் நான் பொய் பேச மாட்டேன் என கூறினார்கள்.

இதனை கேட்டு இன்னும் ஆச்சரியம் அடைந்த கொள்ளையர் தலைவன். “வேறு என்ன உன் தாயார் உபதேசம் கூறினார்?” என மிகுந்த ஆச்சரியத்தேடு கேட்டான். அதற்கு அப்துல் காதிர் ஜீலான்(ரஹ்) அவர்கள். எக் காரணம் கொண்டும் பிறர் பொருளை திருடக்கூடாதென” அறிவுரை கூறினார் என்றான்.

இதனை கேட்ட கொள்ளையர் தலைவன் வெட்கப்பட்டவனாக. தான் அந்த பயணக்கூட்டத்தாரிடம் கொள்ளையடித்தையெல்லாம். திரும்ப அவர்களிடமே ஒப்படைத்து விட்டு. இஸ்லாத்தை ஏற்று திருந்தி வாழ்ந்தான்.

இது முகையத்தீன் அப்துல் காதிர் ஜீலான்(ரஹ்) அவர்களின் வாழ்க்கையில் நடந்த ஒரு ‘கராமத்தாக’ உள்ளது.



# ஆடு மேய்க்கும் இடையனிடம் ஒரு சோதனை

கலிஃபா ஹஸரத் உமர்(ரலி) அவர்கள் ஒரு முறை ஓர் அலுவல் காரணமாக காட்டு வழியே பயணம் செய்ய வேண்டிய நிலை ஏற்ப்பட்டது. இடையில் ஒரு மனிதன் ஆடு மெய்த்துக் கொண்டிருந்ததைக் கண்ட கலீஃபா உமர்(ரலி) அவர்கள் அந்த மனிதனை அனுகி அன்பரே! எனக்கு இந்த ஆடுகளில் ஒன்றை இனாமாகத் தர முடியுமா? என வினவினார்.



ஆட்டிடையன், நண்பரே இது இன்னுடைய ஆடுகளல்ல. ஆட்டுச் சொந்தக்காரனின் அனுமதியில்லாமல் அவ்வறு எனக்குச் செய்ய முடியாது எனக் கூறினார்

கலீஃபா அவர்கள் அம்மனிதனிடம் அப்படியானால் ஒன்று செய். நீ எனக்கு ஒரு ஆட்டைத்தா, சொந்தக்காரன் விசாரித்தால் ஆட்டை ஓநாய் பிடித்துச் சென்றது என்று சொல், அவர் நம்புவார் என்றார்

<u>இடையன் பதில் சொன்னான்:</u>

ஆட்டை ஓநாய் பிடித்துச் சென்றது என்று நான் சொன்னால் எனது எஜமான் நம்புவார். எனினும் எனக்கும் தங்களுக்கும் எஜமானாக இருக்கும் அல்லாஹ் இவற்றை எல்லாம் கவனித்துக் கொண்டிருக்கின்றானே? அவனை ஏமாற்ற முடியுமா?

படிப்பு வாசனையே இல்லாத அந்த ஆட்டிடையனின் இறை நம்பிக்கையை அறிந்த கலிஃபா அவர்கள் அவனை அப்படியே ஆரத்தழுவிக் கொண்டார்கள். அன்பரே! உம்மை பரசோதிக்கவே நான் அவ்வாறு உன்னிடம் வினவினேன். உன்மையிலே நீன் இறையச்சம் கொண்ட உத்தமன். என அந்த ஆட்டிடையனை கலீஃபா அவர்கள் வாழ்த்தினார்கள்.



# புதுச்சட்டை ஆளுநரின் மகளுக்கு இல்லை

ஈராக் நாட்டின் ஆளுநராக கடமைபுரிந்த உமர் இப்னு அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்கள் தனது இறுதிமூச்சுவரை எளிமையான வாழ்க்கையை நடத்தி வந்தார்கள்

ஒரு பெருநாள் தினம், ஆளுநரின் மனைவி பாத்திமா நம்பிள்ளைகளுக்கு நல்ல நாளிலாவது அணிய புதிய சட்டையில்லை. மற்ற பிள்ளைகள் எல்லாம் அழகாக உடுத்தியிருக்க, ஆளுநரின் மகள் அழுக்கு உடையை அணிவதா? அரச நிதியிலிருந்து முற்பணமாக சிறிது பணம் வாங்கி மகளுக்கு புதுச்சட்டை தைத்துக்கொடுங்கள். என்று தனது கணவனை வேண்டி நின்றார்.

ஆளுநரும் புன்னகைத்தவாராக தன் மனைவியை நோக்கி பாத்திமாவே நான் எனது மாத ஊதியத்தைத் தவிர்த்து வேறு பணத்தை எக்காரணத்தைக் கொண்டும் அரச நிதியிலிருந்து பெற விரும்ம்பவில்லை. ந்நான் எடுத்த பணத்தை திரும்பக் கொடுக்கும் முன் பதவி துறக்கப் படுவேனோ, உயிருடன் இருப்பேனோ என்பதில் என்ன நிச்சயமிருக்கிறது. எனவே எப்படியாவது சமாளித்துக்கொள்ளும் என மனைவியைக் கேட்டுக்கொண்டார்.



MUSLIM MAN AND HIS SON DOING OZHU

மனைவியாரும் தமது வீட்டிலிருந்த பழைய விருப்பொன்றைக் கிழித்து அதில் மகளுக்கு பெருநாள் சட்டை தைத்து கொடுத்தார்கள்.

இஸ்லாமிய நல்லாட்சியாளருள் உமர் இப்னு அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்கள் பிரபலமானார்கள். இவர்கள் மரணிக்கும் போது இவர்களிடம் இரண்டே இரண்டு உடைகள் தான் இருந்தனவாம். இஸ்லாத்தின் இரண்டாவது கலீஃபா ஹஸரத் உமர்(ரலி) அவர்களின் பரம்பரையில் உதித்த இவர்கள் இஸ்லாமிய சரித்திர ஆசிரியர்களால் இரண்டாவது உமர் என வர்ணிக்கப்படுகிறார்கள்.



## பகைவருக்கும் இரங்கிய ஏந்தல் நபி (ஸல்)

யமாமா நாட்டுத் தலைவர் இஸ்லாமிய போர்வீரர்களோடு போர்தொடுத்து தோல்வி கண்டட்தால் முஸ்லிம் படைவீரர்கள் அவரைக் கைது செய்து அண்ணல் நபி(ஸல்) அவர்கள் முன் நிறுத்தினார்கள். பகைவர்கும் இரக்கம் காட்டும் ஏந்தல் நபிகளார் அவரைத்தன் விருந்தினராக ஏற்று உபசரித்தார்கள். ஏழ்மையிலே வாழ்ந்த



NABI (SAS)

அண்னலார் அவருக்கு எந்தவித குறைவுமின்றி சகல வசதிகளையும் செய்து கொடுத்தார்கள். சில நாட்களின் பின் அவருக்கு விடுதலை கிடைத்தது. நாயகத்தின் நற்பண்புகளால் ஈர்க்கப்பட்ட அந்த தலைவர் ஈற்றில் இஸ்லாத்தினை தழுவினார்.

இறுதியில் தன் நாடு திரும்பிய அத்தலைவர் மக்காவின் குறைஷிக் காஃபிர்கள் பெருமானார் (ஸல்) அவர்களை இம்சைப்படுத்தி வந்ததால் மக்காவுக்கு வழக்கமாக அனுப்பி வந்த உணவுப்பொருட்களை இனி அனுப்புவதில்லையென முடிவு செய்தார். மக்காவில் பஞ்சம் ஏற்படவே மக்காவாசிகள் இது பற்றி பெருமானார் (ஸல்) அவர்களுக்கு மதீனாவுக்கு தூது அனுப்பினார்கள்

உடனே பெருமானார்(ஸல்) அவர்கள் யமாமா தலைவருக்கு பின் வருமாரு செய்தி அனுப்பினார்கள். “அவர்கள் நமது விரோதிகளாயினும் உணவுப் பொருட்களை அனுப்பாமல் தடை செய்வது குற்றமாகும். நாம் எவரையும் நிர்பந்தப்படுத்தி இஸ்லாத்தினில் சேர்க்கும் கொள்கை உடையவர்கள் இல்லை. எனவே வழக்கம் போல் உணவுப் பொருட்களை மக்காவுக்கு அனுப்புங்கள்.”

உடனே தலைவர் உணவுப் பொருட்களை மக்காவுக்கு மீண்டும் அனுப்பிவைத்தார்கள்.



# நீதியில் முன் அனைவரும் சமம்

ஒரு முறை உயர் குலப் பெண்ணொருத்தி திருட்டுக் குற்றத்திற்காக பெருமானார்(ஸல்) அவர்களின் சமூகத்திற்கு கொண்டு வரப்பட்டாள்.

திருட்டுக் குற்றம் புரிந்தவரின் கையைத் துண்டிப்பது இஸ்லாமிய நீதிமுறை. எனினும் இப்பெண் உயர் குலத்தைச் சேர்ந்தவள் என்பதால் இவளை காப்பாற்றி தண்டனையிலிருந்து விடுதலை செய்ய பலர் முயற்சித்தனர்.




எனவே பெருமானார்(ஸல்) அவர்களோடு நெருங்கிய தொடர்பு கொண்ட ஹஸரத் உஸாமா(ரலி) அவர்களின் உதவியை நாடினர்.

இது பற்றி பெருமானாரிடம் எடுத்துரைத்து அப்பெண்ணைக் காப்பாற்றக் கோரினர். உஸாமா(ரலி) அவர்களும் இது பற்றி அண்ணல் நபி(ஸல்) அவர்களிடன் இதமாக எடுத்துக் கூறினார்கள்.

அதற்கு பெருமானார்(ஸல்) அவர்கள் “உஸாமாவே செல்வந்தர்களுக்கு ஒரு நீதி, வறியவர்களுக்கு ஒரு நீதி என பாரபட்சம் காட்டியதாலே எமது முந்தைய சமுதாயம் அழிந்தொழிந்தது. நீதியின் முன் அனைவரும் சமம். “எனது அன்பு மகள் பாத்திமா திருடியிருந்தாலும்  அவருடைய கையை வெட்ட நான் தயங்க மாட்டேன்.” என்று

கூறி அப்பெண்ணுக்கு தண்டனை வழங்கி இஸ்லாமிய நீதியை நிலை நாட்டினார்கள்.

நீதிக்கொரு தலைவர் அன்னல் நபி(ஸல்) அவர்களிடம் பரிந்துரை பேச வந்த உசாமா(ரலி) வெட்க்கி தலைகுனிந்து பெருமானாரிடம் மன்னிப்பு கோரினார்கள்



## உழைப்பால் வரும் உயர்வு

பெருமானார் (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து “யாரசூலுல்லாஹ் எனது குடும்பம் வறுமையால் வாடுகிறது. எனக்கு ஏதேனும் உதவி செய்யுங்கள்” என யாசகம் கேட்டு நின்றார்கள்

அதற்கு பெருமானார்(ஸல்) அவர்கள் “உமது வீட்டில் ஏதாவது பொருட்கள் இருக்கின்றனவா?” என வினவினார்கள்.

அம்மனிதரோ “ தண்ணீர் அருந்துவதற்கான பாத்திரமொன்றும் போர்வையும் தான் இருக்கின்றன” என்றார்



அண்ணலார் அப்பொருட்களை எடுத்து வரச் சொல்லி தனது தோழர் மத்தியில் அப்பொருளை ஏலம் விட்டார்கள். நபித்தோழர் ஒருவர் அதை வாங்கி பணத்தை பெருமானாரிடம் கொடுக்கவே அவர்கள் அதை அந்த ஏழையில் கையில் கொடுத்து “இந்த பணத்தில் பாதியை உனது உணவுத்தேவைக்காக உபயோகப்படுத்து, எஞ்சிய பணத்திற்கு கடைத் தெருவுக்குப் போய் கோடாரி ஒன்று வாங்கி காட்டுக்குப் போய் விறகு வெட்டி விற்று உனது வாழ்க்கையை நடத்து. அல்லாஹ் உனக்கு அருள் புரிவான்” என்று உபதேசித்து, பிறரிடம் யாசிக்காமல் உழைத்து உண்ணும் வழியை பெருமானார் அந்த ஏழைக்கு உணர்த்தினார்கள். அந்த மனிதரும் அன்று முதல் யாசிப்பதை விட்டு உழைப்பால் உயர்வு பெற்றார்.



# பொய் சொல்வதை விட்டதன் பலன்

ஒருமுறை பெருமானார் (ஸல்) அவர்களின் சமூகத்திற்குப் புதிதாக இஸ்லாத்தினை தழுவிய ஒருவர் வந்து அல்லாஹ்வின் தூதரே! என்னிடம் நாண்கு கெட்ட பழக்கங்கள் இருக்கின்றன. திருடுதல், சூதாடுதல், மது அருந்துதல், பொய் பேசுதல் ஆகியன அக்கொடிய பழக்கங்களாகும். இவற்றில் நான் எதை முதலில் தவிர்த்துக் கொள்வது? என விநயமாய் வேண்டி நின்றார். பெருமானார்(ஸல்) அவர்களோ பொய் பேசுவதை விட்டு விடும் என அந்நபருக்கு உபதேசித்தார்கள். அவரும் இனி என் வாழ் நாளில் பொய்யே உரைக்க மாட்டேன் என உறுதிமொழி கூறிச் சென்று விட்டார்.



பின்னர் அவர் அன்றிரவு திருடுவதற்கு வெளியே செல்ல ஆயத்தமானார். எனினும் திருடிவிட்டு திருநபியின் சமூகத்தில நான் எப்படி திருடவில்லை எனப் பொய்யுரைப்பது என்று எண்ணியவாறே எல்லாத்தீய செயல்கட்கும் அன்று முதல் முற்றுப்புள்ளி வைத்து நல்ல மனிதராய் மாறிவிட்டார்.

பொய்தான் அனைத்திற்கும் காரணம் அதனை விட்டொழிப்போம்



## வியக்க வைத்த அந்த மாணவர்!

இமாம் மாலிக் (ரஹ்) அவர்கள் சிறந்த மார்க்க மேதையாவார்கள் பிரசித்தி பெற்ற நான்கு இமாம்களில் இவரும் ஒருவர். இவர் மதினா நகரிலே ஹதீஸ் வகுப்புகளை நடத்திக்கொண்டிருந்தார். இவரிடம் ஸ்பெய்ன் நாட்டைச் சேர்ந்த யெஹ்யா என்ற மாணவரும் கல்வி கற்றுக் கொண்டிருந்தார்.

இமாம் அவர்கள் பாடம் நடத்திக்கொண்டிருந்தபோது ஒரு நாள் தெருவழியே யானை ஒன்று சென்று கொண்டிருந்தது. மாணவர்கள் அனவரும் யானையை பார்க்க வெளியே வந்து விட்டனர். ஆனால் யெஹ்யாவோ தன் இடத்தில் உட்கார்ந்து பாடத்தில் கவனம் செலுத்திக் கொண்டிருந்தார்.



இமாம் அவர்களுக்கு இந்நிகழ்ச்சி வியப்பாக இருந்தது. அவர் அம்மாணவரை நோக்கி யெஹ்யா! உமது நாட்டிலும் யானை கிடையாதே, நீரும் அந்த யானைய பார்த்திருக்கலாமே! என்றார்கள் அதற்கு அந்த மாணவர், இமாம் அவர்களே, நான் அவ்வளவு தொலைவிலிருந்து யானையை பார்க்க இங்கு வரவில்லை. தங்களிடம் மார்க்க சம்பந்தமான நல்ல விஷங்களைக் கற்றுக்கொள்ளவே இங்கு வந்துள்ளேன்! என்றார்.

தனது மாணவரின் அருமையான பதிலைக் கேட்டு இமாம் அவர்கள் மகிழ்ந்தார்கள். மதிநுட்பமுள்ள மாணவர் என வாழ்த்தினார்கள். இவரே பிற்காலத்தில் ஸ்பெய்ன் நாட்டின் மாமேதையாக திகழ்ந்தார்கள்.



## பழங்களை தனியாக புசித்த காரணம்



பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு நாள் தமது தோழர்களுடன் அளவளாவிக் கொண்டிருந்த பொழுது வயது முதிர்ந்த பெண்மணியொருவர் வந்து திராட்சைப் பழக்குலையொன்றை அன்பளிப்பாக கொடுத்தார்கள். அண்னலவர்கள் அந்த பழங்களைப் புசிக்கலானார்கல். தனது தோழர்களுக்கு பகிர்ந்து கொடுக்காமல் அத்தனைப் பழங்களையும் வழக்கத்திற்கு மாறாக பெருமானார்(ஸல்) அவர்கள் தனியாக உண்டது தோழர்களுக்கு வியப்பாக இருந்தது. அப்பெண்மணியோ அப்பழங்கள் அத்தனையும் பெருமானாரே சாப்பிட்டதில் அளவற்ற மகிழ்ச்சி கொண்டு வீடு சென்று விட்டார்.

பின்னர் தோழர்கள் பெருமானாரை நோக்கி தாங்கள் எந்த அன்பளிப்புப் பொருட்கள் வந்தாலும் எமக்கு பகிர்ந்து கொடுப்பீர்களே இன்று மட்டும் ஏன் வித்தியாசம்? என வினவினார். அண்ணலார்கள் புன் முறுவலுடன் அந்த மாது கொண்டுவந்த பழங்கள் அனைத்தும் புளிப்பாக இருந்தன. உங்களுக்கு நான் அதைக் கொடுத்தால் சாப்பிட்டு விட்டு பழங்கள் புளிக்கின்றன என்று சொல்வீர்கள். அப்போது அப் பெண்ணின் மனம் வேதனைப்படும்

அப்பழங்களை அன்பளிப்புச் செய்த அந்த அம்மையாரின் மனதைப் புண்படுத்த நான் விரும்ம்பவில்லை. எனவே தான் எல்லாப் பழங்களையும் நானே புசித்தேன். என நவின்றார்கள் எவர் மனதையும் நோகச் செய்ய விரும்பாத அண்ணலெம் பெருமானவர்கள்.

> *நபிகளாரின் இந்த குணத்தை நாமும் பின் பற்ற முயல வேண்டும் (இன்ஷா அல்லாஹ்)*



## ஒரு பூனைக்குட்டிக்கு இரங்கியதற்காக

இறை நேசச்செல்வர் ஷிப்லி(ரஹ்) அவர்கள் மரணித்ததும் அவரின் சீடர்களில் ஒருவர் அன்னாரை கனவில் கண்டார். சுவர்க்கலோகத்தில் மகிழ்ச்சியாக அழகான ஆடை அலங்காரத்துடன் அவர் காணப்பட்டார்.

உங்கள் வெற்றிக்கு காரணமென்ன**?** என சீடர் அவரிடம் வினவவே அவர் எனது வணக்கத்தின் காரணமாக எனக்கு இந்த உயர் பதவிகை அளித்து அல்லாஹ் என்னை மன்னித்தான் என நினைத்தேன். ஆனால் இதற்குக் காரனம் எனது ஒரு சிறிய நற்செயலே என அன்னார் விளக்கமளித்தார்.



ஒரு நாள் நான் பாக்தாத் நகர தெருவழியே சென்று கொண்டிருந்தேன். கடுங்குளிர்காலம் குளிர் தாங்க முடியாது ஒரு சிறிய பூனைக்குட்டி நடுங்கிக் கொண்டிருந்த்து. அதன் மேல் இரக்கங்கொண்ட நான் அதன் குளிரைப் போக்குவதற்காக அதனை என் போர்வைக்குள் வைத்துக் கொண்டேன். அந்தப் பூனைக்குட்டிக்கு இரக்கங்காட்டியதன் காரணமாக அல்லாஹ் எனக்கு இரக்கங்காட்டினான். என்று அன்னார் கூறினார்.

*எனவே, நாம் எல்லா உயிர்களிடத்திலும் இரக்கங்காட்ட வேண்டும்.*

*பூமியிலுள்ளவர்கள் மீது நீங்கள் இரக்கங்காட்டுங்கள் வானத்திலுள்ளன் உங்கள் மீது. இரக்கங்காட்டுவான்.*

*இது அண்ணல் நபி(ஸல்) அவர்களின் அமுத வாக்காகும்* .



## பிறருக்கு உபதேசம் செய்யுமுன்

ஒரு நாள் பெருமானார் (ஸல்) அவர்களின் திருச்சமூகத்திற்கு ஒருவன் தனது சிறு வயது மகனைக் கூட்டிக்கொண்டு வந்து அல்லாஹ்வின் தூதரே! இவன் அதிகமாக இனிப்புச் சாப்பிடுகிறான். இனிப்பு அளவுக்கதிகமாகச் சாப்பிடுவது உடம்புக்கு ஆகாதென இவனுக்கு புத்திமதி கூறுங்கள் என வேண்டி நின்றார்.

பெருமானாரோ இன்று போய் நாளை வாருங்கள் என அந்த நபரை அனுப்பிவைத்தார்கள்.

இரண்டாம் நாளும் அவ்வாறே அவர்களை திருப்பி அனுப்பிவிட்டு ,மூன்றாம் நாள் அவர்கள் வந்ததும், மகனே! இனிப்பு அதிகமாகச் சாப்பிடுவது உடம்புக்கு கேடுவிளைவிக்கும் எனவே இனிப்பு சாப்பிடுவதை குறைத்துக் கொள். என அந்த சிறுவனுக்கு புத்திமதி கூறினார்கள்.

அப்போது அச்சிறுவனின் தந்தை நாயகமே! இதை நீங்கள் முதல் நாளே சொல்லியிருக்கலாமே, இதற்காக நாம் மூன்று நாள் வந்து விட்டோம் எனக் கூறினார்.



பெருமானார் (ஸல்) அவர்கல் புன்முறுவலுடன், ஆம் உண்மைதான். நானும் இனிப்பை விரும்பி சாப்பிடுகிறேன். முதலில் நான் அதை கட்டுப்படுத்திய பின்னரல்லவா பிறருக்கு உபதேசம் செய்யவேண்டும் அதனால் தான் இத்தனைச் தாமதம், மன்னியுங்கள் என்றார்கள் மாநபி(ஸல்) அவர்கள்.

*(** இது நபி(ஸல்)அவர்களின் வாழ்க்கையில் நடந்த ஒரு சம்பவமாகும்.*

*இந்தியாவின் தேசந்தந்தை எனப் போற்றப்படும் மகாத்மா காந்தியடிகள். சுதந்திர போராட்டத்திற்காக சிறை சென்றபோது. மாநபியின் வரலாற்றை படித்து மற்றும் கேட்டுத்தெரிந்து கொண்டார்கள்.. இதே போன்ற ஒரு சம்பவத்தினை காந்தி அடிகள் தனது வாழ்நாளில் நடத்திக் காட்டினார்கள். காந்தியடிகளின் இந்த சம்பவம் மிகவும் பிரசித்தி பெற்றது.)*



## ஈன்ற தாயில் கடனுக்கு எது ஈடாகும்

ஒரு முறை ஒரு மனிதர் தனது வயது முதிர்ந்த தாயை தோளில் சுமந்தவாறே புனித கஃபாவை வலம் வந்து கொண்டிருந்தார். அதனை கண்ட ஒரு பெரியார் ஒருவர் அம்மனிதரை நோக்கி இது யார்? உனது தாயென்று நினைக்கின்றேன் என்றார்.

அதற்கு அம்மனிதர் ஆம் இது என் தாயார் தான். கடந்த பல வருடங்களாக இவ்வாறு எது தாயைத் தோளில் சுமந்து எல்லா இடங்களுக்கும் செல்கிறேன் என்று கூறி நான் என் தாயாருக்கு செய்ய வேண்டிய கடமைகளை நிறைவேற்றியவனாக ஆகிவிட்டேனா? என அந்த பெரியாரிடன் வினவினார்.




அதற்கு அப்பெரியார் நீர் ஆயிரம் வருடங்கள் உலகில் வாழ்ந்து உனது ஆயுள் முழுவது உனது தாயைச் சுமந்து திரிந்தாலும் உன்னை உனது தாய் அவரின் கர்ப்பத்தில் ஓரிரவு சுமந்ததற்கு சமமாகாது. அத்தோடு அவளின் மார்பிலிருந்து நீர் ஒரு முறை குடிந்த பாலுக்கு இதனை விட மேலான பணிவிடைகளைச் செய்தாலும் கூட சமமாகாது எனக் கூறினார்

அம்மனிதர் அழுதவராக அவ்விடத்தை விட்டு அகன்றுவிட்டார்.

> *"இதனாலேயே அண்ணல் நபிகள், உனது தாயில் காலடியில் கீழ் தான் சுவர்க்கமிருக்கிறது என நவின்றார்கள்."*



# எளிய வாழ்விலும் இணையற்ற நேர்மை

இஸ்லாத்தின் முதற் கலிஃபா அபூபக்கர்(ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் அரச நிதியிலிருந்து (பைத்துல் மால்) அவர்களுக்கு ஒரு சிறு தொகை உதவிப்பணமாக வழங்கப்பட்ட்து. இதனைக் கொண்டே அவர்களின் வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தார்கள்

ஒரு சமயம் அவரின் அன்பு மனைவியார் தனக்கு இனிப்புப்பண்டம் சாப்பிட ஆசையாக இருப்பதாக கலிஃபா அவர்களிடம் விநயமாக வேண்டி நின்றார்.

தமது அன்றாட வாழ்க்கையை நட்த்துவதற்கே கிடைக்கும் வருவாய் போதாமல் இருக்கும் போது இனிப்புப்பண்டம் செய்ய பணத்திற்கு எங்கே போவது என்ற எண்ணத்துடன் கலிஃபா அவர்கள் பதிலேதும் கூறாமல் மௌளனமாக இருந்து விட்டார்கள்.




சில நாட்களின் பின் அன்னாரின் மனைவியார் இனிப்புப்பண்டங்கள் சில செய்து கலிஃபா அவர்கள் முன்வைத்து உண்ணும்படி வேண்டி நின்றார்கள். கலிஃபா அவர்களோ, உமக்கு இனிப்புப்பண்டம் செய்ய ஏது பணம் என வினவ, மனைவியோ பெருமிதத்துடன், தாங்கள் செலவிற்குத்தரும் பணத்தில் மிச்சம் பிடித்து இதனைச் செய்தேன் என்று கூறினார்கள். உடனே கலிஃபா அவர்கள் அரச நிதிக்காப்பாளருக்கு பின்வருமாறு கடிதம் எழுதினார்கள்.

எனக்கு வழங்கும் சம்பளப் பணத்தில் கணிசமான தொகையை குறைத்து இனிமேல் எனக்கு வழங்கவும். ஏனெனில் எனது அத்தியாவசிய தேவைக்கு மேலதிகமாக அரச நிதியிலிருந்து பணம் பெற நான் விரும்பவில்லை.

சுபஹானல்லாஹ் என்னே! அண்ணாரின் நேர்மை!!

வாழ்வில் எளிமையும் நேர்மையும் நாமும் கடைபிடிக்க வேண்டும்



## ஏழைகளின் நபி(ஸல்) அவர்கள்

அண்ணல் நபி(ஸல்) அவர்கள் ஒரு முறை மஸ்ஜிதுன் நபவியில் தோழர்களின் மத்தியில் உபதேசம் செய்து கொண்டிருந்த போது கந்தலுடையுடன் ஓர் ஏழை அங்கு வந்து கூட்டத்தினருடன் சேர்ந்து உட்காராமல் மாறாக கூச்சப்பட்டவராக நின்று கொண்டிருந்தார்கள்

இதனைக் கண்ட பெருமானார் (ஸல்) அவர்கள் அம்மனிதரை நோக்கி நண்பரே! நீங்கள் ஏன்? சபையில் உட்காராமல் தனித்து நிற்கிறீர்கள்? என வினவினார்கள். அதற்கு அம்மனிதர் அல்லாஹ்வின் தூதரே! நானோ பரம ஏழை என்னுடைய உடையோ அதைவிட மோசம் தங்களின் மேலான சபையில் அமர்வதற்கு அருகதையற்றவன் எனக்கூறினார்கள்



அப்போது பெருமானார்(ஸல்) அவர்கள் எழுந்து வந்து அந்த ஏழையை அணைத்தவராக, அன்பரே! அல்லாஹ்வின் முன்னிலையில் எல்லாரும் சமமே. நானும் ஒரு ஏழைதான். உலர்ந்த ரொட்டியும் பேரீச்சம் பழத்தையும் உண்டு வாழ்ந்த ஓர் ஏழைதாயின் வயிற்றில் பிறந்தவன் நான் என்று கூறி அந்த ஏழையை தன் பக்கத்திலே அமரவைத்தார்கள் காருண்ய நபியவர்கள்



## இழுவு செய்தவர்மீது எத்தனை இரக்கம்

அண்ணல் நபி(ஸல்) அவர்கள் தினமும் அதிகாலை பள்ளிக்கு தொழுகைக்காக செல்லும் வேளையில் ஒரு யூத வயோதிப பெண் ஒருவர், பெருமானார் (ஸல்) அவர்கள் மீது குப்பைகளைக் கொட்டி ஏளனம் செய்வதை வழக்கமாக்கிக் கொண்டிருந்தாள், பொறுமையின் சின்னமான நபிகளார் புண்முறுவலுடன் பள்ளியை நோக்கி நடப்பார்கள்.

ஒரு நாள் பெருமானார் மீது குப்பை விழவில்லை. ஆச்சரியம் அடைந்த அண்னல் நபி(ஸல்) அவர்கள் பள்ளியிலிருந்து வீடு திரும்பும் வழியில், கிழவியின் பக்கத்து வீட்டில் விசாரித்தார்கள், விசாரித்ததில் அவள் கடும் நோயினால் படுத்த படுக்கைய்யாகி விட்டார் என அறிந்தார்கள்.




உடனே நோய் விசாரிக்க கிழவியிடம் சென்ற பெருமானார் அவர்கள் தாயே! உங்களுக்கு என்ன நோய், அல்லாஹ் தான் உங்களுக்கு நல்ல உடல் நலத்தினை தர வேண்டும் என வேண்டி நின்றார்கள்.

இத்தன அன்புள்ளம் கொண்ட நல்லவர் மேனி மீதா நான் குப்பைகளைக் கொண்டி வந்தேன் என தன்னையே நொந்து கொண்ட அவ்வயோதிக பெண் வெட்கி தலைகுனிந்து மாநபியே மன்னியுங்கள் என்று பணிவாக வேண்டி நின்றார். அத்தோடு புனித இஸ்லாத்தையும் ஏற்றுக்கொண்டார். அந்த பெண்.



## எதிரியை நடுங்க வைத்த அந்த வார்த்தை

ஒரு முறை பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு போரின் போது ஓய்வெடுப்பதற்காக ஒரு மர நிழலை நோக்கிச் சென்றார்கள். மரக்கிளையொன்றில் தனது வாளைத் தொங்கவிட்டுச் சிறிது உறங்கினார்கள். அப்போது எதிரில் வந்த எதிரியொருவன் மரத்தில் தொங்க்கிய வாளைக் கையில் எடுத்து அதைப் பெருமானாரின் நெஞ்சில் வைத்து முஹம்மதே! இப்போது உன்னைக் காப்பாற்றுபவர் யார்? எனக் கேட்டான்.

பெருமானார் (ஸல்) அவர்கள் “அல்லாஹ்” என்றார்கள். அவன் நடுங்கியபடி வாளைக் கீழே போட்டு விட்டான்.

பிறகு பெருமானார் (ஸல்) அவர்கள் அந்த வாளைக் கையிலேந்தி இப்போது உன்னைக் காப்பாற்றுபவர் யார்? எனக் கேட்டார்கள்.



அதற்கு அவன் நீங்கள் தான் என்றான் அப்போது பெருமானார் (ஸல்) அவர்கள் உன்னையும் என்னையும் காப்பாற்றக்கூடியவன் அந்த அல்லாஹ் வை தவிர வேறு யாருமில்லை என்று கூறி எதிரியை கூட மன்னித்து அனுப்பினார்கள்



## பெற்ற மகளுக்கும் நீதி ஒன்றுதான்.!!

பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு முறை போரில் கிடைத்த கனீமத் பொருட்களைத்தன் தோழர்கள் மத்தியில் பங்கு வைத்துக் கொண்டிருந்தார்கள், அவ்வேளை அங்கு வந்த அன்னாரின் அன்பு மகள் அன்னை பாத்திமா (ரலி) அவர்கள், அண்ணலாரிடம், என் அன்புத்தந்தையே! வீட்டு வேலைகளைச் செய்வதற்கு மாத்திரம் எனக்கு ஒரு அடிமைப் பெண்ணைத் தாருங்கள். இதனால் என் வேலைப்பளு குறையும் என்றார்கள்.

இதனைக் கேட்ட அண்ணலவர்கள், அன்பு மகளே! இங்கு குவிக்கப்பட்டிருக்கும் பொருள்களும், அடிமைகளும் எனக்குச் சொந்தமில்லாதவை அல்ல. போரில் பங்கு

பெற்றவர்களுக்கே சொந்தம். நான் போரில் பங்கு பற்றியவர்களுக்கே சொந்தம். நான் போரில் பங்கு பெற்றிருந்தால் என் பங்கில் உனக்கு ஒரு அடிமைப் பெண்ணைத் தந்திருக்கலாம். அல்லது உன் கனவர் அலி(ரலி) பங்கு பெற்றிருந்தாலும் உனக்கு இப்பொருள்களில் உரிமையுண்டு. ஆனால் போரில் பங்கு பெறாமல் இதனை எப்படி உரிமை கோர முடியும்



எனவே! மகளே உன் வேலைகளை நீயே செய்து கொள். தன் வேலைகளை தானே செய்து கொள்வதுதான் நல்லதும், திருப்தியானதுமாகும். அல்லாஹ் உனக்கு நல்ல உடல் ஆரேக்கியத்தை தருவானாக..! என்று வாழ்த்தி வீட்டுக்கு அனுப்பி வைத்தார்கள். நீதியின் நாயகர் நபிநாதர் அவர்கள்

<u>எனவே நம் வேலைகளை நாமே செய்து கொள்ள முற்பட வேண்டும்.</u>



